உ

ஸ்ரீ சண்முகநாதன் துணை.

S. R. S. பெரியாம் பிள்ளை பாடிய

# ஸ்ரீ கதிர்காம துதி.



1. கங்காதரன் செவியில் மங்காத பிரணவம்
கழரியருள் செய்த முருகா
கர்பனைக் கெட்டாத பரப்பிர்ம சொரூபமாய்
கதிரையி லமர்ந்த முருகா.

சங்காரமூர்த்தியின் திருக்குமாரனுகிய
சண்முக நாத முருகா
சகமாய்கை எனும்பந்த பாசமதை யகற்றிடும்
சச்சிதானந்த முருகா.

மங்காத ஜோதிப்பிர காசமயி லேறிடும்
மணிமந்திர விஞ்சை முருகா
மகமாயி திரிசூலி பைரவி குண்டலி
மகனுயுதித்த முருகா.

சிங்கார வள்ளிக்குஞ் சரியோ டுலாவிடும்
சிவய நமக் கதிரை முருகா
சித்தர் தவமுனிவர்கள் நித்தமும் போற்றிடும்
சிவக்கதிர் காம முருகா.

2. காலனைக் காலாலுதைத்தவன் பாலனெனக்
ககனத்தோர் துதிக்கும் முருகா
கற்பூர ஜோதிநிறை கதிர்காம நகர்தனில்
காட்சி யுற்றிலங்கும் முருகா.

பாலனைக் கரிசமைத் தண்ணவன் செவிதனில்
பழமறை புகன்ற முருகா.
பங்கையன் சிரசினில் குட்டியே சிரையிட்ட
பகாறிய ஞான முருகா.

நீலனைக் கடல் துயிலும் வண்ணன் மருகனென
  நீணிலம் புகழும் முருகா
நித்திய நிராமய நிஷ்களானந்த சுக
  நிமலனெனும் கதிரை முருகா.

சீலனைக் கரையேற்ற சிகரமீதில் வாழ்ந்திடும்
  சின்மயானந்த முருகா
சித்தார்த்த தத்துவ பக்தி எமக்கீய்ந்திடும்
  சிவக் கதிர்காம முருகா.

3. கிஞ்சுகமொழியுடைய வஞ்சிவள்ளியிடம்
  கிழவனென வந்த முருகா
கிரவுஞ்சகிரியோடு தாருகா சூரனைக்
  கிழித் தெறிந்திட்ட முருகா

மிஞ்சுபுகழ்தேவ குஞ்சரியோடு கதிரையில்
  மிளிர்ந் தொழிறும் ஞான முருகா
மிக்கபுகழ் பெற்றிடும் கற்பகக்கோன் மகளை
  மிகு மணம் புரிந்த முருகா.

விஞ்சை மந்திரமதை தந்தையின் செவிதனில்
  விளங்கிட உரைத்த முருகா
விண்ணோர்கள் சேனாதிபதியென சூர்சசரில்
  விழையுத்தம் புரிகும் முருகா.

கொஞ்சு மடியார்களின் குறைதீர்க்கும் மூர்த்தியென
  கொண்டாடும் கதிரை முருகா.
கோதில்லா நான்மறை புகழ்ஞானபண்டிதக்
  கோன் கதிர்காம முருகா.

4. கீரன் மகிழ்ந்தருளிய செந்தமிழ்க்கவிக்கருட்
  கிருபை புரிந்த முருகா.
கீர்த்திப்பிரதாபமொடு கார்த்திகைப்பாலுண்டு
  கிலேசம் தவிர்த்த முருகா.
வீரமிகும் நவவீரர் துணையோடு கதிரையில்
  விளங்கிடும் சக்தி முருகா.
வித்தகனெனும் ஞான முத்துலிங்கேசர் துதி
  விரும்பி மணமகிழ்ந்த முருகா.



தீரணிக்திடும்ஞான நிர்த்தனன் சங்கரன்
நினைக்கும் கதிர்காம முருகா
நீடுபுகழ்ந்திடும்ஆறு வீடுகுடி கொண்டிடும்
நிஷ்களானந்த முருகா

காரணிசிவசெத்தி பைரவி குண்டலி
நயன்ற சிவசத்தி முருகா
நவசத்தி சிவசத்தி தவசத்தி புகழ்ந்தென்றும்
நவில் கதிர்காம முருகா.

5. குலவுதென் பரங்கிரி பழமுதிர் சோலை மலை
குடி கொண்டிலங்கும் முருகா.
குன்றுதோராடிடும் குமரகுக மூர்த்தியென
குவலயம் துதிக்கும் முருகா.

உலகெங்கும் புகழ்கதிரை மாணிக்க கங்கையில்
உவந்தொழிற்கின்ற முருகா.
உத்தமபக்தர்கள் நித்தமும்பாமாலை
உரைக்க மனமகிழும் முருகா.

புலனைந்து மடக்கியே யோகமுணர் ஞானிகள்
புகழ்ந் துதிக்கின்ற முருகா.
புகழ் சந்தப்பா சொன்ன அருணகிரி நாதர்க்கு
புனிதவர மளித்த முருகா.

சுழலும்வ்வையக பந்தபாச மதைச்
சுட்டெரிக்கின்ற முருகா.
சுரர்முனிவர் புகழ் கதிரை மாணிக்ககங்கைநிறை
சுகிர்த்த கதிர்காம முருகா.

6. கூர்வாள்வில் அம்புடன் எதிர்த்திட்ட அவுனர்களை
கூறுசெய்திட்ட முருகா.
கூறுமடியார்களின் குறைகேட்டு அருள்மொழி
கூறும் மெஞ்ஞான முருகா.

பார்மண்டல முதல் சப்தசாகரங்களையும்
படைத்துக் காத்தருளும் முருகா
பக்திமிகும் உத்தமர்கள் சித்தமதிலுறைகின்ற
பரப்பிர்ம நாத முருகா.

சீர்தங்கும் கீரனின் திருமுருகாற்றுப்படை
சிறக்க வருள்செய்த முருகா
சிவசரஹண பவஎனத்தொழும் பக்தர்கள்
சித்தமதி லுறையும் முருகா.

கார்கொண்ட மேனியன் மருகனென செந்தமிழ்க்
கவிவாணர் புகழும் முருகா
கலைமாது மலைமாது புவிமாது புகழ்ந்திடும்
கதிர்காம வேலு முருகா.

7. செருவில்மிகும் அவுணர்களை அழித்தமரர் கொண்டாட
செடிபெற்ற ஞான முருகா
செக்கரித்தார் வமுடன் கொக்கரித்திடும் சேவல்க்
கேதனம் கொண்ட முருகா.

தெருவான முக்கோணவீதி கதிர்காமநகர்
தேவனுயமைந்த முருகா
தெள்ளுதிணைக்காவிலே வள்ளியை மணந்த அருட்
தெய்வீகஞான முருகா.

பெருமைமிகுந்தவயோகி முத்துலிங்கேசர் துதி
பேசிடும் சத்தி முருகா
பேசரியசதுர்மறை துதிக்கின்ற சண்முகப்
பெருமானே ஞான முருகா.

வெருமையில்லாதெனை ஆண்டு கொண்டருள்புரி
வேண்ணியரன் பால முருகா
வேதாகம்புகழ ஈழமா நகர்தனில்
மேவுகதிர்காம முருகா.

8. கேசவன் மருகமுருகேசனென அடியார் துதி
கேட்டு அருள்செய்த முருகா
கேடுவினையகற்றி மேம்பாடு எமக்களித்திடும்
கெம்பீரமான முருகா.

நேசமோடுபக்தரைக் காத்திடும் கதிர்காம
நெடியபுகழ் தங்கும் முருகா
நேயமொடு தொழுப்பவரின் மாயவினையகற்றியே
நேர்நின்று காக்கும் முருகா.

பேசரியவிஞ்சையை தந்தையின் செவிதனில்
பேதமற புகன்ற முருகா
பெரும்புகழ் ரெட்டியின் காவடிச்சிந்து கவிப்
பெருமையுடன் கேட்ட முருகா.

தேசமெங்கும் புகழ் கதிர்காம நகர்தனில்
தேவனாயமைந்த முருகா
தெள்ளுதமிழ் வாணர்புகழ் வள்ளிமணவாளனெனும்
தெய்வீக ஞான முருகா.

9. கைலாசமேருகிரி தணிகாசலம் பழனி
கைப்பரங்குன்ற மலையும்
கைக்குறுந்தடிமலை கழுகுமலை குடகுமலை
கைலாச நாதர்மலையும்

மைக்கண்ணி வள்ளிமலை வளர்பாண்டி ஏழுமலை
மைலாடும் சோலைமலையும்
மைலாசலமலை மணிக்கழுங் குன்றமலை
மங்காத தங்கமலையும்

வைக்கந்தமாதனம் வனசமலை நாதமலை
வைகைதவழ் ஆனைமலையும்
வையகம் புகழ்மலை நந்திமலை தேக்கமலை
வைடூர்ய கடம்ப மலையும்

நைப்பவளமாமலை நாகமலை தோகைமலை
நைனாமலை பொதிகையும்
நற்றவத்தோர் புகழும் கதிர்காமமலைமேவும்
நாதனெனும் ஞான முருகா.

10. கொஞ்சிவிளையாடியிரு வஞ்சியர்கள் மகிழ்ந்திடும்
கொழுணனெனும் குமர முருகா
கோதில்லா நான்மறை புகழ்ந்திடும் கற்பகக்
கோன் மருகனான முருகா.

நெஞ்சாரத் தினந்தினம் பணிந்திடும் பக்தர்கள்
நேரில்வந் தருளும் முருகா
நெடியபெரும் வேங்கைமர மாகியே வள்ளியை
நெகிழ்ந்து மகிழ்ந்தணைந்த முருகா.



செஞ்சேவல்க்கொடியுடைய ரஞ்சிதனென இந்த
செகத்தோர் துதிக்கும் முருகா
செகமீதிலறிவாளர் துதிகூறும் கதிர்காம
ஜெய வெற்றிவேலு முருகா.

கொஞ்சுமொழி வஞ்சியுமை பாலனென மாந்தர்கள்
கொண்டாடித் துதிக்கும் முருகா
கொக்கரிக்கும் சேவல்க் கொடிபறக்க ஞானக்
கோல மயிலேறும் முருகா.

11. கோலாகலக்குமர லீலாவிநோதனெனக்
கோரும் கதிர் காமமுருகா.
கோதில்லாக் கலியுக மெய்த்தெய்வமென அன்பர்
கொண்டாடும் கதிரை முருகா

நாலாமறை புகழும் நாதாந்த விஞ்சையை
நாதனுக்குறைத்த முருகா
நவிலுமடியார்களின் குறைதீர்க்க கதிர்காம
நகரினி லமர்ந்த முருகா.

ஆலால முண்டகனி வாயனின் சேயனென
அவதரித்திட்ட முருகா
அச்சுதன் மருகனென இச்சகத்தோர் புகழ்
ஆறுமுகனென முருகா.

பாழான எனதுவினை தீர்த்தருள் நல்கிடும்
பன்னிரு கரத்து முருகா
பகரறிய யோகிகள் புகழ்ந்திடும் கதிர்காம
பரப்பிர்ம சொரூப முருகா.

12. கௌரி வந்தெடுக்கவே ஆறுருவமொன்றான
கௌரவக் கந்த முருகா
கௌரி கௌமாரி ஜெகதீஸ்பரி ஞானப்பால்
கொள்விப்பருகும் முருகா.

சௌரிக்கி முத்தியன்றளித்த ரகுராமனின்
சௌஜன்ய மருக முருகா
சௌந்தர்ய வள்ளியின் கைதிதினைமாவுண்ட
சௌந்த ரானந்த முருகா.

மௌனமிகும் தவராஜர் போற்றிடும் அத்வீத
மௌடீக ஞான முருகா
மௌனயோக சார வாசிநிலை நல்கிடும்
மணிமந்திர விஞ்சை முருகா.
கௌபீணம் தலைமொட்டை உத்திராக்ஷதாள்வடம்
காவியணிகின்ற முருகா
ககனத்தோர் துதித்திடும் கதிர்காமக்கிரிமீது
காட்சியுற்றிலங்கும் முருகா.

13. க்கலியுகத்தில் மெய்க் கடவுளாய் கதிரையில்
இலங்கிடும் ஞான முருகா
இகணம் தன்னிலே எழியேன் முன்வந்தருள்
இளங் குமரனான முருகா.
இகாலமும் சதா எக்காலமும் உனை
இயம்பித் துதிப்பேன் முருகா
இக்கவிபாடிடும் பெரியாம்பிள்ளைக்கருள்
இனிய கதிர்காம முருகா.

அஃகளின் பாலனென அருந்தவத்தோழர் புகழ்
ஆறுமுகமான முருகா
அஃகங்கொடுத்தென்னை ஆண்டுகொண்டருள்புரி
அகார முதலான முருகா
இகதிர்காம நகர்மேவு குழந்தாண்டி என
இமையோர் துதிக்கும் முருகா
இகவியிலேதுபிழை இருந்தாலும் பொருத்துனது
இனியவருள் தாரும் முருகா

ஸ்ரீ முருகன் துணை சுபம்.

## ஆசைக்கிளியே—என்றமெட்டு.

ஆசைக்கதிரை நேசக்குமரனுக்
கரோஹரா—அரோஹரா
அங்கயர்க்கண் அம்பிகைசேய்க்
கரோஹரா—அரோஹரா (ஆ)

காகமனுகா கதிர்காமம் வளர்
கந்த வேளுக் கரோஹரா
கங்கணவீரசு மங்களசோபித
கதிர்மலை நாதனுக் கரோஹரா (ஆ)

மயிலில் நடமாடி வரும்
மாவடிவேளுக் கரோஹரா
அயிலின் கொடி துலங்கவே மத
யானையில் வருவோனுக் கரோஹரா (ஆ)

மலைமகளான மாதுமை பாலன்
மரகதமயிலோனுக் கரோஹரா
மாண்புமிகும் பெரியாம்பிள்ளை செந்தமிழ்
மாலையணிவோனுக் கரோஹரா (ஆ)




முற்றிற்று.

கலைமகள் அச்சகம் காலாடிப்பேட்டை சென்னை 19.

வெளிவந்து விட்டது! வெளிவந்து விட்டது!

என்ன? அதுதான்

**மாந்திரீக நிபுணர்களுக்கு நல்விருந்து**

இன்றே ஆர்டர் செய்யுங்கள்

குறைந்த விலை! நிறைந்த முறைகள்!

# மலையாள மாந்திரீக

# வராகி மாலை.

மாந்திரீகம் கற்றுக்கொள்ளும் நண்பர்களே இதில் கணபதிமூல மந்திரம், கணபதி பூஜை, உடல்கட்டு, சுப்பிரமணியர் பூஜை, உச்சாடணம் சமுதாயமாரல், அனுமார் பூஜை, அனுமார் வசியம், சுளுக்கு மந்திரிக்க, தேள்விஷமிறங்க, பாம்புகடிக்கு விஷமிறங்க, குழந்தைகளுக்கு உண்டான குளிதோஷம், ஜலம்மந்திரிக்க, சத்திபூஜை, வாலைவசியம், வாலைசடாக்ஷரம், மனோன்மணிபூஜை, ஏவலை திருப்ப, பிசாசுகளை விலக்க, வைப்புகளை திருப்ப, பேய்பந்தனம் செய்ய பயம் தெளிய விபூதிபிடிக்க, மோகினிவசியம், அஷ்டலட்சுமிவசியம் காட்டேரிவசியம், சகல கழிப்பு கழிக்க, மதுரைவீரன் பூஜை மயான ருத்திரன் பூஜை, காளிவசியம், பத்திரகாளி வசியம், முத்துமாரியம்மன்பூஜை, வயிரவர் வசியம், ஜண்டிவசியம், திருநாகேஸ்வரி வசியம் நவகிரகங்கள் வசியம், கட்டருக்கமந்திரம், வியாபாரத்திற்கு வசியம் இன்னும் இவைபோன்ற அநேகவிதமான சங்கதிகள் அடங்கியுள்ளன இதில் சக்கரங்களும் அவைகளுக்குரிய மந்தரங்களும் செய்ய வேண்டிய கிரமங்களும் பூஜைக்குண்டான சாமான்களும் விபரமாக எழுதியுள்ளது யாவரும் அதிவிரைவில் கற்றுக்கொள்ளலாம்.

**விலை ரூபா 1—4—0**

கிடைக்குமிடம்:—

சரஸ்வதி புத்தகசாலை

**175, செட்டியார் தெரு கொழும்பு**

 வி ஸ்ரீநிவாஸய்யங்கார் மலர் 27.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

    

# திருவரங்க மாலை

## அம்பத்தூர் அறநெறி

அரங்க வெளியீடு—44



இது

ஸர்வ மங்கள ஏவிளம்பி ஆண்டு கார்த்திகைத் திங்கள்
ஐந்தாம் நன்னாள் (20-11-1957) புதன்கிழமை
கதளீ விருத லக்ஷ்மீ விருத மாசசிவராத்திரி
தத்தாத்ரேய ஜயந்தி ஸ்வாதி நக்ஷத்திரம் கூடிய
சுபயோக சுபதினத்தன்று
அம்பாள்புரி ஸ்ரீபுவநேச்வரி பீடாதிபதிகள்
பரமஹம்ஸ ஸ்ரீ சாந்த சுப்ரமணிய ஸ்வாமி திருமுன்பு
வழங்கப்பெற்ற

## தோத்திர மாலை.



...கக் காரியாலயம்:
...மௌந சுவாமிகள் மடத்துத் தெரு,
அம்பத்தூர்.
20—11—1957.




# முகவுரை.

செந்தமிழ் நன்னாட்டுப் புலவர் திலகம் அநுமந்த நகரம் மஹாவித்வான் முத்தமிழ்க் கவிச்சிங்கம் ஸ்ரீ உ. வே. சுந்தரராஜய்யங்கார் ஸ்வாமி இயற்றிய அஷ்டப் பிரபந்தங்களாவன:—(1) பட்டர்பிரானந்தாதி, (2) சூடிக் கொடுத்தாள் மாலை, (3) திருக்கோதை பதிகம், (4) ஸ்ரீ ரெங்கநாச்சியார் பதிகம், (5) திருவரங்கப் பதிகம், (6) சேடகிரிப் பதிகம், (7) அநுமப் பதிகம், (8) கண்ணன்றுதி என்பன. இற்றுள் 3, 4, 6, 7, 8 இலக்கமிட்டவை முறையே 'திருக்கோதை மாலை'(அரங்க வெளியீடு 36, மதுரகவி ஸ்ரீநிவாஸய்யங்கார் மலர் 23. 30—7—57), 'ஸ்ரீரங்கநாயகியார் மாலை (42, 26. 11-9-57), 'சேடகிரி மாலை' (33, 21, 18-7-57), 'அநுமந்தபதி அநுமன் அலங்கல்' 35, 2?, 30-7-57), 'கண்ணன்துதி மாலை' (38, 25, 10-8-57) என்ற திருநாமங்களோடு அம்பத்தூர் அறநெறி அரங்க வெளியீடுகளாக முன்னரே வெளி வந்துள்ளன. இனி வரவேண்டுவன 1, 2, 5 என்ற எண் உள்ளவை. அவற்றுள் "திருவரங்கப் பதிகம்" (5) "திருவரங்க மாலை" என்ற திருநாமத்தோடு "அம்பத்தூர் அறநெறி அரங்கம்" என்ற சந்தமிகு செந்தமிழ்க் கழகத்தின் 44-ஆவது வெளியீடாக (மதுரகவி ஸ்ரீநிவாஸய்யங்கார் மலர்-27)ப் பிரசுரிக்கலாயிற்று.

இப்பதிகம் "சீர்கொண்ட தென்னரங்கர் * * * காரிமா றன்கழலே காப்பு" என்ற நம்மாழ்வார் விஷயமான பாட்டுடன் தொடங்குகிறது. "மதி கொண்ட" என்று ஆதிப்பா ஆரம்பமாகி எட்டாவதுபா "நிர்கிமித்திய" மென்று முதலடி முதல். 9, 10-ஆம் பாடல்கள் ஏட்டில் இல்லை. "எட்குமுதம் நாசி கனிவாய் மதிமுகம் *** தேசிகன் வாழியே"என்பது இறுதியில் இலங்கும் இருந்தமிழ் வாழிப்பா. பாட்டுத் தோறும் ஈற்றடி "சுந்தரத் தோளனே சுரர்துதி

செய்தாளனே சுயவழக மணவா ளனே" என்ற மகுடம் புனைந்து வருகின்றது. "உபயவே தாந்த குண சீலனென் றியாவரு முரைசெய்தே சிகன் வாழியே" என்று இப்பதிகத்தை முற்றுவித்திருப்ப திலிருந்து இக்கவிச்சிங்கத்தின் சந்தமிகு தமிழ் மறையோன் தாப்புல் தோன்றும் வேதாந்த குருபக்தி வெள்ளிடை விலங்கல்.

இச்சீரிய நற்பிரபந்தம் அம்பாள்புரி ஸ்ரீபுவனேச்வரி பீடாதிபதிகள் பரமஹம்ஸ ஸ்ரீசாந்த சுப்ரமணிய ஸ்வாமியின் திருநக்ஷத்திர தினத்தன்று(கார்த்திகைச் சோதித்திரு நன்னாள். ஸ்ரீதத்தாத்ரேய ஜயந்தி) வெளிவருவது இதன் தனிப்பெருமை.

அஷ்டப்பிரபந்த கையெழுத்துப் பிரதியை எமக்கு நல்கிய ஆயுஷ்மாந். ஆர். கோவிந்த (அன்பு) ராஜன், **Auditor, Accountant General's Office, Madras, No. 5, First Street, Lakshmipuram**) என்ற சீரிய நற்குணநிதிக்கு எமது நன்றி என்றும் உரித்தாகுக.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

*ஸ்ரீரங்க விலாஸம்,*
*அம்பத்தூர்.*
*20—11—1957.*

ப. ரெ. திருமலை அய்யங்கார்,
*காரியதரிசி.*



ஸ்ரீ:

செந்தமிழ்த் தென்பாண்டி நன்னாட்டு அநுமந்தநகரம்

**ஸ்ரீ உ. வே. சுந்தரராஜய்யங்கார் ஸ்வாமி**

இயற்றிய

# திருவரங்கப் பதிகம்

## காப்பு

**சீர்கொண்ட தென்னரங்கர் சேவடிமேற் செந்தமிழாந்**
**தார்கொண்டு நானுவந்து சாத்தவே-வார்கொண்ட**
**பேரிமா றென்னமறைப் பேரொலிசேர் தென்குருகைக்**
**காரிமா றன்கழலே காப்பு.**

## நூல்

மதிகொண்ட கலைநிறைவு பெற்றமுக மும்பவள
வாயுமலர் மாது புவியா
மங்கையர்கள் மனமுமய லுறுமந்த காசமும்
வனமாலை யணிமார் பமுஞ்
சுதிகொண்ட மறைதேடு கின்றபதமுங் கருணை
சொரியுமிரு நயனமும் பூந்
துய்யநின் றிருமேனி யழகுமென் மனத்தினிற்
றுலங்கும்வர மேயருளு வாய்
கதிகொண்ட தென்றிருக் காவேரி யோடுவட
காவேரி நடுவ ணெவருங்
கண்டுபர மானந்த வைபவங் கொளவினிமை
காட்டும்வை குந்த பதியாய்த்
துதிகொண்ட திருவரங் கத்தர வணைக்கண்மிசை
துயில்வளரு கின்ற துவளச்
சுந்தரத் தோளனே சுரர்துதிசெய் தாளனே
சுயவழக மணவா ளனே. (1)

ஒப்புவமை யில்லாத வுனதருளி னைக்குறித்
தோதுகவி சொலு மன்புசெய்
துளமுவந் தேனதினி லுயர்பாக்கி யம்படைத்
தோனென்ன வுறு மளியனுக்

கெப்பிறவி வரும்வகை புரிந்தாலு நின்னடிய
ரிணையடிய ரடிய ரிருதாட்
கேவல்செய் தொழிலெனது தொழிலென்ன நினைகின்ற
விதையம தெனக் கருளுவாய்

முப்புவனம் வாழ்பவர்க ளேயெனை யடைந்தாடின்
முத்திநெறி தருவ னெனவே
மொழியும்வகை யென்னவெங் கரிமருப் பகில்சவரி
மோதிவந் துடன் முழங்கித்

துப்பிவை கொடுந்துமலை சேர்திருக் காவேரி
சூழ்தென் னரங்க நகர்வாழ்
சுந்தரத் தோளனே சுரர்துதிசெய் தாளனே
சுயவழக மணவா ளனே. (2)



மிக்ககுல நலமுற்ற கீர்த்திப்ர தாபமொடு
விதரணிக மெய்தி யெதினு
மேன்மைபெறு கின்றகன யோகம் படைத்தரிய
வேள்விசெய் தெவையு முளதாய்த்

தக்கபல செல்வந் தழைத்தவர்க ளெனினுநின்
றூட்டா மரைக்க ணன்பு
சார்ந்திலர்க ளென்னிலவ ரிலவுகாத் திடுகிளி
தனக்குநிக ராவர் கண்டாய்

எக்கலை களுஞ்சுருதி முடிவுமதி னுறுபொருளு
மின்பமுற வேதெரிந் தோ
ரென்றுமொழி வில்லாத கடவுணீ யாகுமென
வெண்ணியிதை யத்தி ருத்தித்

தொக்கவை ணவசிகா மணிபாண நித்தியர்கள்
சூழ்திரு வரங்க நகர்வாழ்
சுந்தரத் தோளனே சுரர்துதிசெய் தாளனே
சுயவழக மணவா ளனே. (3)



வேலைநடு விற்றிரு வனந்தவணை மீமிசையின்
மேலுலக மென்று மிதினு
மிக்கபர மானந்த வைபவத் தோடுமிரு
விழிதுயிலு நீ மணப்பூ

மாலைபெற வேதிருக் கோதைநா யகனென்ன
வாழ்வுபெற வோசிறந் தோர்
வாழ்வில்லி புத்தூரி லெந்நாளு நின்ருள்
வருந்தநிற் பது சொல்லு வாய்

காலையினி னுளும் புகன்றிடக் கேட்டுக்
களிந்துருகி யன்பு கூர்ந்தே
கண்டெனுஞ் சொற்பதின்மர் தமிழ்பாடு சுகநிரைக்
கணமுவந் துறைகின்ற தண்

சோலைமலர் மணம் வந் துலாவுமரு கெழிலாற்
றுலங்கிய வரங்க நகர்வாழ்
சுந்தரத் தோளனே சுரர்துதிசெய் தாளனே
சுயவழக மணவா ளனே. (4)

நடமாடு தொழிலேது பொருளேது துணையேது
நவிலுமனை மக்க ளேது
நாமேது நீயேது யென்றறிவு குன்றிமெய்
நடுங்கியுடல் சோரு மந்நாட்

படமாடு கின்றபணி யெனவந்து சீறும்யம
படரென்று சொன்ன கொடிய
பாதகர்க ளால்வரும் பயமெனக் கிலையென்று
பண்ணுவது முன்கட மையே

தடமாடு மாதர்முக நறுநீல மலர்குமுத
சண்பகத் தொடு மலர்ந்த
தாமரை யெனக்கருதி வந்தமய லாலுருகு
தமதுளத் தாசை கொண்டே

தொடமாடு சென்றவரி வண்டுபல பலகோடி
தொடர்திரு வரங்க நகர்வாழ்
சுந்தரத் தோளனே சுரர்துதிசெய் தாளனே
சுயவழக மணவா ளனே. (5)

காவென்ற மொழிசெவிப் புகுமுனக் கணம்வந்து
கைக்கடா சலமுய் யவே
காத்தவுனை யேதுதித் தனுதினமு முறையிட்ட
காரண முணர்ந் தினியருள்

தாவென்ற மொழிசெவிக் கேற்கவிலை யோதலைமை
சாரவிலை யோவென் மீதிற்
றயவுவர விலையோவுனக் குரியமேன் மைபுகழ்
தன்மையிது வோசொல் லுவாய்

மாவென்ற விழியரம் பையர்களொடும் வளர்தருவும்
வானவரோ டனநி றைந்த
மானதப் பெருவாவி தன்னினெடு பொன்னுலகம்
வையகந் தனி லிழந்த

தோவென்ற வற்புத மிகுந்ததி சயங்கள்பல
தோன்றிய வரங்க நகர்வாழ்
சுந்தரத் தோளனே சுரர்துதிசெய் தாளனே
சுயவழக மணவா ளனே. (6)

மூன்றுதமி ழென்றவதி னுட்பொரு ளமைந்தநெறி
மூறைமை யறியாத வளியேன்
முதிருமறை யுணர்பவ ரிடஞ்சென்று குளறுமொழி
மூங்கையர்க ளோது புன்சொற்

போன்றுனது மீதுசொலு மிக்கவிக் குளமகிழ்வு
பூத்துநின் புகழ் போலவே
பொறுமைபெரி தேநல மெனக்கருணை கொண்டிவை
பொறுப்பதி லுனக் கழகுகொண்

வான்றுதி செயச்சிறந் தழுதமுண் டரமங்கை
மார்நல முவந்த போகம்
வாய்த்ததே வாதியரு முயர்நல முறப்பெறும்
வரமிது வெனக் களித்துத்

தோன்றுபிற விக்காசை கொள்ளுமெய்ப் பலனது
துலங்கிய வரங்க நகர்வாழ்
சுந்தரத் தோளனே சுரர்துதிசெய் தாளனே
சுயவழக மணவா ளனே. (7)

நிர்மிமித் தியமென்று தள்ளாம லளியேனை
நீமகிழ்ந் தெவருமேன்மை
நிலைமைபெற வோதுமின் னுமமென் றுயர்நல
நிறைந்ததிரு மந்தி ரத்தைக்
கர்னவமு தம்மெனக் கொண்டவர்க டிருமாளி
கைக்கருகு காவல் செய்தே
காணுமுச் சிட்டமுணு நாயென வகுப்பினுங்
கதிபெறுவ னிதுபொய் யாமோ
வர்னமணி மேடைகொண் டமைந்திந்திர நீலமணி
வாய்ந்தசா ளரம ருங்கு
வந்தமதி தந்தநிரை தரளவொளி காட்டுமட
மாதரணி முகநா டிய
சொர்னமணி யாடியென வளர்மாட மெங்குந்
துலங்கிய வரங்க நகர்வாழ்
சுந்தரத் தோளனே சுார்துதிசெய் தாளனே
சுயவழக மணவா ளனே. (௮)

9, 10-ஆம் பாடல்கள் ஏட்டில் இல்லை.

வாழி.

எட்குமுதம் நாசிகனி வாய்மதி முகங்குமிழி
யென்றதிரு நாபி கொடியா
மென்னுமிடை கொண்டரி பரந்துமை திகழ்ந்தொளிசெய்
தெழில் வளருகின்ற வயிலாங்
கட்கமலை வாழிபுவி மகள்வாழி யிணைநெடுங்
காவேரி வாழி தலமாக்
காட்டுவீ டணன்வாழி வைணவர்கள் வாழிநற்
கதியருளு கின்ற சந்த்ர
புட்கரணி வாழிபிர ணவவிமா னத்திநெடு
பொன்னரங் கேசர் வாழி
பொற்பிரம் பேந்துகைச் சேனைமன் னவன்வாழி
போற்றும்வை ணவ மகிமை
யுட்கொளும் பதின்மரோ ருரைசெய்கின் றவர்வாழி
வைணநற் புருடன் வாழு
யுபயவே தாந்தகுண் சீலனென் றியாவரு
முரைசெய்தே இவன் வாழியே.



சென்னை ஜீகின்மோகினி அச்சகம் சென்னை-5.

